# சுந்தரகாண்ட பாடல்.

கிளி[illegible]தை இயற்றியது.



ஸ்ரீரங்கம்

ஸ்ரீ வாணீ விலாஸ் பிரஸ்,

1931.



## ஆஞ்சநேயபாஹி.

### வணக்கம்.

விழியேயென விளங்கி நல்வழியே யளிக்குமிராமகாதை
அழியாவமுதெனவே யளித்தனரிருநூல் வல்லோர்
வழியே யறியாதேனதனில் வளமிகு மிக்காண்டம் பாடல்
பழிப்பேயென்றென்னெஞ்சம் பலகாலுமஞ்சிடுமே.

அஞ்சிலேயொன்று பெற்ற அநுமான் துணையாக
அஞ்சிலேயொன்றளித்த அண்ணலைத் துதிசெய்தே
அஞ்சிலே நின்றொளிர் அப்பரம் பொருள் பணிந்தேன்
அஞ்சலே யகற்றியெனை யானந்தமாக்கிடவே.

காற்றநிலுதித்தே கடுங்காற்றென கடற்றாவியுயிர்
காற்றெனவங்குதவிநின்றே காற்றெனவனமழித்துகனல்
காற்றென நகரழித்து காற்றென வாழிகடந்தே நல்
காற்றெனத் திரும்பியே நலமளித்தான் பதம் போற்றி.

எண்ணினேனினிவரும் எழில்பதமுணர்ந்தறிந்திடவே
எண்ணினேனின்புறமவர் குரலெடுத்தோதிடவே
எண்ணினேன் எழில்வீரன் புகழெங்குமார்த்திடவே
எண்ணினேன் பாடலதன் குறை பெரியோர் பொறுத்திட
[வே.

---



# சுந்தரகாண்ட பாடல்.

## 1. ஹநுமார் லங்கைக்கு புறப்படுதல்.

ரா. பியாக்.

1. பார்புகழும் ராமாயண கீர்த்தி—சீர்பெறவே செப்பிடும்
பூர்த்தி—நேரிழையாளஞ்சனையின் வயிறதின் நேர்த்
தி—ஆகவே அவதரித்த ஆஞ்சநேயனும் திவ்யமூர்த்
தியை பணிவோம்—வாயுசுதன் பாதம் நம் சிரமணி
வோம்.

2. உதித்த உடன் உயர்முகம் நோக்கி—உதித்திடும் பா
னுவை மனம்தேக்கி—உயர்கனி அவனென உளமகிழ்
வாக்கியே—ஓங்கியே பாய்ந்திட்ட உத்தமமான அந்த
தீரன்—ஒப்புவமையில்லாத சூரன்.

3. சுற்றிடும் பானுதமெதிராய் கற்றிட்டான் கலைகள்மிகு
சதுராய்—குற்றமில்லா சுக்ரீவனை குணமுடனணுகி
யே—நற்றவபலமோங்க காதலும் ஸ்ரீராமனையே கண்
டான்—ஆதாரமவனெனக் கொண்டான்.

4. அன்னையாம் ஜானகியைத்தேட—அனுப்பிய கவிகள் திசைநாட—ஆழி கடந்துசெல்லும ஆற்றலுடையோனிந்த—அனுமனொருவனால் தானாகும் மற்றவருரைகள் வீணாகும்.

5. என்றுரைத்தார் எல்லவரும் சோர்ந்து—மாருதியின் மகிமை மனமோர்ந்து—நன்றெனவே ராகவனும் நாடியே மாருதியை—கன்றெனவே நோக்கியருள் கனிந்தே சார்ந்தெடுத்தான்—கணையாழி அவன் கையில் கொடுத்தான்.

6. ஆழி கைவாங்கியேதோர் அன்பன்—அந்தரங்கமாகிடு நண்பன்—போராழி கடந்திடவே பெருமையாய் இரிபேசி—வாழி வாழியெனும் வாக்கு செவிகொண்டான்—வளமிகுராமமுட்கொண்டான்.

## 2. நடுவில் மைனாக பர்வதத்தையும் எ சந்தித்தல்.

ரா. ஸ்ரீராமசந்திரனே.

1. பதப்பொருளை அவன் மனம் எண்[illegible] பாய்ந்திட நண்ணியே நின்றானே—பரம்பொருள் ஆசியுனை கைக்கொண்டானே.

2. சித்திகள் தானறிந்தோன் பக்திவழிதெரிந்தோன் எத்திசையும் போற்றிட வந்தானே—எங்கும் சுற்றிலும் பார்த்தங்கு நின்றானே.



3. நாற்றிசையும் வணங்கி நல்லோர் ஆசிகட்கிணங்கி நாடி
யேயெடுத்திட்டான் விசுவரூபம்—நன்மையாம் இதி
ஹாஸமதின் தீபம்.

4. அஷ்டதிசை நடுங்க அரக்கர் பலமொடுங்க ஆகாயமார்க்
கமதாய் வருகின்றான்—அமரர்க்கே யானந்தம் தருகின்
றான்.

5. மாருதியின் சிரமம் நீங்க மைனாக பர்வதத்தை மகிழ்ந்து
மேனோக்கியே நில் என்றார் தேவர்—மாவீரன் பாதம்
சிரம் கொள் என்றார்

6. அலைகடலிலமிழ்ந்திய அம்மலையும் தானெழும்பி அமர
வே அனுமானை வேண்டியதே—அவனை உபசரிக்க அ
தன் மனம் தூண்டியதே.

7. அம்மொழி கேட்டந்த அனுமானுமவனை நோக்கி அ
டைந்தேன் மகிழ்வு நின்மொழி தனக்கே—ஓர் தடை
யாகாது நான் செல்வழிக்கே.

8. என்றியம்பி உளம் மகிழ்ந்து எழில் கையை மீதமர்த்
தி எழும்பினார் ஆகாயமார்க்கமதாய்—எந்த திக்கும் அ
திர ஓர் நோக்கமதாய்.

9. வாயுவேகத்துடனே வருமந்த வீரனெதிர் வந்தாளே
சுரசையும் தேவர்வாக்காய்—வலதறியவேவேண்டுமென்
னும் பெருநோக்காய்.

10. வாயுசுதன் வழிமறித்தந்த சுரசையும் பேய்க்கோல
மாகியே பெருகி நின்றாள்—எந்தன் வாய்க்கிரையாக
வே வேண்டுமென்றாள்.

11. பூமானும் ஸ்ரீராமன் தூதன் நான் செல்லும்வழி தாம
தம் செய்திடாது தயவு செய்வாய்—அஃது ஆனவுடனே
மைவேன் அணங்கே நின்வாய்.

12. என்றுரைத்த மாருதியின் இன்பவுரையேற்காது ஏ
காண்டமாகத்தன்வாய்திறந்தாள்—அவன் எதிரில்நின்
று வழிதான் மறித்தாள்.

18. சித்திகைவந்த நாதன் சத்தியனுவுருவை பற்றியே வா
னிலோட் சென்றானே—எத்திசையும் புகழ்வெளி நின்
றானே.

---

## 3. ஸமுத்திர மத்தியில் ஸிம்ஹிகையைக் கொன்று ஹநுமார் லங்கை சேருதல்.

ரா. அடாணா.

1. காற்றினும் வேகமாய் வரும் வழிதன்னிலே கண்டா
னே மற்றொரு தடையும்—தோற்றிடும் நிழலைப் பிடித்
தீர்த்தாளந்த துஷ்டையாம் ஸிம்ஹிகையும்.

2. அதனை அரக்கியின் சாதனையறிந்தே வளர்ந்தானந்த அ
நுமான்—ராமதூதனை விழுங்கவே ராகுவைப் போல
வாய்பிளந்து வந்தாளவள் தான்.

3. நோக்கிய மாருதியும் நண்ணிய உடனாக நுழைந்தே
அவன்தன் வாயில்—ஆக்கிய காலிடை அசர்த்தமாய்
கிழித்துமே ஏகினர் பெருவெளியில்.

4. தேவ கந்தர்வர் சித்தர் சாரணர்கள் ஜயஜயவென்
றேகூற—ஆவலாய் மாருதி ஆகாயமார்க்கத்தில் அன்பு
டன் மீளஏற.

5. தடைகளை கடந்தேதான் தருக்கதோர் வேகமாய் க
ண்டாரந்த லங்கை—அடைந்தே களிக்கடல் அழகு
சீரமாய் அமர்ந்தார் சுவேலமலையில்.

6. அறிஞரும் மாருதி ஆராய்ந்து அக்கர் அரணும் நிற
னையறிந்தார்—தெரியா திருக்கவே சிறிய உருவுடன்
இரவில் வெளிவந்தார்.

### 4. ஹநுமார் லங்கிணியை ஜயித்தல்.

ரா. காணுதகாட்சி.

1. கோட்டைக்குள் நுழையும் வேளைதனிலங்கு கோர உ
ருவமாம் பெண்ணுருவம்—கிட்டமாம் குரலால் சீபோர்
குரங்கே நீ வந்த உண்மையை உரைதியென்றாள்.

2, அம்மொழிகேட்டந்த அநுமானும் நோக்கியே அறிய
உனக்குச் சொல்வேன் நானே—ஆனாலும் நீயார் அதட்
டுறாய் எந்தனை அறியவே யெந்தனுக்குரைத்திடுவென்
றான்.

3. தான்கேட்ட மொழிக்கே தக்க உரையின்றி தன்னையெ
திர்த்தோன் முகம் நோக்கி—நானே தானிந்த லங்கை
யின் காவல்—நானே உன்னுயிர் வாங்குவேனென்றான்.

4. அரக்கியை வென்றிடும் ஆற்றல்மேற்கொண்டு அசை
யாமல் மாருதி அவனைநோக்கி—அழகான இந்நகர் அ
திசயம் நோக்கலன்றி யெனக்கு மற்றொன்றில்லை
யென்றான்.

5. இம்மொழி கேட்டவள் ஏளனமாகவே என்னை ஜெயித்
தன்றோ ஏகுவாய் உள்ளில்—எனடா மூடா என்றியம்
பியவள் எடுத்தே கையதால் விடுத்தாள் ஓரறை.

6. மாபுஜபலவீரமாருதியும் பெண்ணை மகிமையாம் வலக்
கரமோங்காது—இடதுகரத்தால் எடுத்தளித்தாரரை
லங்கினிகர்வமும் பங்கமுறவே.

7. அடியுற்ற அவளும் அடிபணிந்தேபோற்றி அடியா
ளுன்னால்தான் தோல்வியுற்றேன்—அரக்கர் குலமினி
அழிவுறும் காலம் அணுகியதென்றந்த அயன் மொழி
சொன்னாள்.

8. பகர்ந்திட்ட மொழிகேட்டு பலவானும் மாருதி பாத
மாம் வலதை வைத்துட்சென்றான்—அகர்ந்திட அசு
ரன் அமர்ந்திட வீடனன் அரியதோர் திருவும் ஆநந்த
மாகவே.

---

## 5. ஹநுமார் லங்கையைச் சுற்றி வந்து ராவணனந்தப்புரத்தில் ஸீதையைத் தேடுதல்.

ராக. மடிவயிற்று மகன்போல (திருப்புகழ்).

1. தானவர் குலமுமழிந்திடவே யந்த
ஜானகியின் மனம் களித்திடவே யதற்
கானபொருளாமதுமாறும் லங்கையுள்—திரிந்தானே.

2. வானுலாவிய மதிள் மாளிகைகளும் துளிர
தேன்மணத்திடும் நறுமலர் சோலையும் திவ்ய
கானமொலித்திடும் காட்சியெல்லாம கண்டு—களித்தா
[னே.

3. வேதமொலித்திடும் வேள்விச்சாலையும் பல
காதமணத்திடும் பாகசாலைகளும் கோடி
ஆதவனெனவொளிர் ஆயுதசாலையும்—அறிந்தானே.

4. நால்வகைப்படையின் நலனும் திறனும்
கவிதியுமங்குநாடிய தவமும்
மேவுதாம் தேவர்கள் மேவிய பணியும்—பார்த்தானே.

5. பொன்னகரக்கன் பொருந்தந்தப்புரத்தில்
அன்னையை தேடிடும் ஆவலுடனே
தன்னயமாகவே நாடியே அங்கு—சென்றானே.

6. மாளிகை மாளிகை யாகவே சுற்றியும்
மாதரசி யமமை தினிகாணேன் பாகி
யாளிவனந்தப்புரத்திலும் பார்த்து—தீர்ந்தனே.

7. இஷ்டமுடனெங்கும் தேடியபோதொளிர்
புஷ்பக விமானத்தின் புதுமையுங்கண்டு
அஷ்டைசுவரியமிகுத அரக்கனுக்கமைந்து—தென்று
[னே

8. பானமாம் மதுவால் பகுத்தறிவற்றோரும் பொய்
மோனமாம் நித்திரையில் மூடியகண்ணோரும் உயர்
நாணமின்றியே நழுவிய கலையோரும்—கண்டானே.

9. அற்புதமானவோர் மஞ்சந்தன்னில் மிகு
கற்புடைய மண்டோதரியைக்கண்டு நெஞ்சம்
பொற்பதமணித்திடும் பூவையிவளென—மயங்கினான்

10. நாதனுக்கேற்ற நாயகியாளித
பாதகனிருப்பிடம் பதிவாளாவென்று
ஆதரவாகவே அறிவால் அறிந்தப்—புறமானான்.

11. இக்காட்சிகள் காணலெனக்கேயாகாது
ஆனாலுமெந்தனையணுகாது நீது மிகு
மாட்சியாம் எம்மனம் மயங்குவதேதிதனை—சென்று
[னே

---

6. ஸீதையைக்காணாமையால் மனமேங்கி ஹநுமார்
அசோகவனமடைந்து சிம்சுபா விருக்ஷத்தில் அமர்தல்.

ரா. இந்துஸ்தான் ப்யாக்.

1. எங்கெங்குந்தேடியும் ஏதும் பலனறியேன்
செங்கமலத்துறைவாளின் சேர்பிடமறியேன்.

2. ஜாம்பவன் துதித்திட சார்ந்தேன் பெருமையாய்
ஆம்பலனென்றுமின்றி அலைவேனோ சிறுமையாய்

3. போராழி தாண்டியும் பெருமைதானேது
சீராழி அன்னை கையில் சிறப்புறச்சேராது.

4. மோச அரக்கன் முகமுழித்திடலாகாதென
பாசமாய் ஆழிக்குள் பாய்ந்தே விழுந்தானோ.

5. அந்தரத்தொளிர்ந்திடுமெ சந்திரனே யெந்தன்
அன்னையிருப்பிடமேயறிந்திட உரைப்பாய்.

6. சோகத்தாலிவ்விதம் சோர்ந்து தெளிந்து
வேகமாய் மாருதி பாய்ந்தனோர் மதிலில்.

7. அங்கிருந்தஷ்ட திசையும் கைதொழுது
பங்கிருந்து வெற்றிதா பாமனை துதித்தான்.

8. சோகத்தை நீக்கவே அசோகவனம் தெரிய
தாகமாயவ்விடம் தாவியே வந்தான்.

9. வாய்கொண்டுரைக்க வொண்ணாவனத்தினற்புதம்.
ஆய்ந்திடவெண்ணியே அநுமானும் வந்தான்.

10. செய்தினையறியவோர் சிம்சபா விருக்ஷத்தை
எய்தியேயமர்ந்தான் எழில் வாவுநோக்கி.

**7. ஸீதையை ஹநுமார் அசோகவனத்தில் கண்டு களிப்பதும்**
**ராவணன் ஸீதையிடம் வருதலும்.**

ரா. விரித்தமார்பும் (திருப்புகழ்).

1. ஆலயம்போலொரு மாளிகையதனிராக்ஷிஸர் காவலாக
அபோதிஜை சீதையும அசஞ்சலமாய் ராமத்யானமாக

2. பொருந்திய ஜ்வாலையை புகைமூடியதொக்குமிவள்மே
[னி
திருந்திய ஆடையுமொளிகுன்றியதிவள் குணமானி

3. வாடியமேனியும் வருந்திய பார்வையுமறிந்தானே
தேடியபொருளுமிவளேயென்று திடன்கொண்டானே

4. பர்வதம் விழுந்த பணிகளின் குறியங்கம் பார்த்தானே
சர்வமும் சரியாயமைந்ததென்றே மனம் பூரித்தான்.

5. அண்டம் நடுங்கும் அரக்கனை யழிக்க ஜகன்மாதா
அமர்ந்தாளேயிங்கு அறிவேனே நானும் மிருதோதாய்.

6. ஒருக்கணமிந்த அரக்கனுயிர் பறிக்க அறியாளோ
தரும விதிக்கே தானடங்கியிவள் தனித்திருக்காளோ

7. பொறுமையே பணியாய் புகழே நன்மதியாய் பொருந்
[திருப்பவள்
அருமையாம் ஸ்ரீராமனுக்கேற்ற திருவழகியிவள்.

8. இவ்விதம் மாருதி எண்ணியே தருவில் களித்திருந்தா
[னே
அவ்விடம் தசமுகன் வருவதை நோக்கி யமர்ந்திருந்
[தான்.

## 8. ஸீதைக்கும் ராவணனுக்கும் தர்க்கம்.

ரா. கார்ஸபடி கல்ல வேளைபடி.

ராவணன்.

1. ஆவலடங்காத (மோக) அரக்கனுமங்குவந்து அன்னை யை நோக்கியே கூறலுற்றான்—காவலது நீங்கி களிப் பெனக்காக கண்மணி வந்திடென்றான்.

சீதை.

2. துரும்பினும் கேடுகெட்ட (இச்சிற) துசியே நீயிங்கு நில்லாது ஏகுவாயப்புறமே—வரும் பாணம் உனக் காய் பார்த்தாமன்கையால் பாவியுயிர் நீக்கிடுவாய்.

ராவணன்.

3. ஸ்ரீ ராமன் தேவியே (புகழ்) சிறப்பாமென் ஆவியே சித்தாகுலமும் ஏனோதானே—பாராயிருந்தாலும் அ ழிப்பேனைகொடி அறியாயோ என்பலமே.

சீதை.

4. பலம்பெற்ற மூடா (புஜ) தவமுற்ற கேடா ஈதிருந்து னக்கென்னவாயிற்றோ தான்—பலனில்லையிதனுல் ப ழிப்புளா மூன்னும் அழிந்திடுவாயென்னலே.

ராவணன்.

5. ஆள அறியாது (அரசாள) ஆரண்யமேவி வந்த ஆண் மகன் அதிதீரனோ தான்—கானகண்டனையும் கலக்கி பேவசம் செய்த கட்டமுகன் வீரன் தானே.

சீதை.

6. வீரமறிவேனே (வீரங்கெட்ட) வீரமில்லாக்காலம் வேஷ மிட்டேவந்த பேடியனோ—தீரமில்லாத்திருடா நின் திறமையறிவேன் திரும்பாது போவென்றாள்.

ராவணன்.

7. இஷ்டமில்லாதவளை (தன்) கஷ்டம் செய்தாலுயிர்
கஷ்டமாமென்றே வந்த—துஷ்டசாபத்தினால் துலைந்
தமெதன்வலி யலையுது மனமுமுன்னால்.

சீதை.

8. நல்லோர்கள் சாபமெல்லாம் (தூய) நாடியே சூழ்ந்த
தன், வல்லாமை செல்லாதினி—எல்லாமறிந்தே என்
நாதனைப்பணிந்தே என்னை அளித்திடென்றாள்.

ராவணன்.

9. என்றமொழிகேட்டு (அளித்திடு) எழுந்த வெஞ்சினத்
தால் ஏகமாய்பார்ப்பரித்தான்—நின்ற அவன் நாயகி தா
னியமாலியும் நன்றல்லவென்றழைத்தேகினான்.

---

9, ராக்ஷஸிகள் ஸீதையை அதட்டேலும் ஸீதை மனவருந்த
மடைந்து தற்கொலை செய்துகொள்ள யத்தனித்தலும்

ரா. மாலை மலரூதும் வண்டே.

1. காவல் புரிபாக்கியரும் கடுமொழியாலேயிட்டவே (தே
வியை)
ஆவலுள்ளத்ரிஜடையும் அவரடங்கவே தன் கனவு
ரைத்தள்.

2. மனத்துயர் தாங்கிடாது மைதிலியும் மனம் கரைந்து
குணமிருந்த ராமனையே கோகிலம் போல் கூவலுற்
[றாள்.

3. அடியாளின் நிலைவுமக்கேயகன்றதோ ஸ்ரீராமா
அறிவெறியே யகலாதயிருவர்க்குமேயீதாமா

4. காலமென்றும் தேவதையே கண்மயக்கும் மானுரு [வாய்
மேலதாமென்னறிவழித்தே மேனியிங்கு சேர்த்தது [வோ.

5. சுத்த வீரனான ராமா உத்தமனாம லக்ஷ்மணனே
எத்தனை நான்தான் பொறுப்பேன் ஏதும் கதி காணே [னே.

6. களங்கமற்ற ஜனகன் வம்சம் களங்கமுறு மென்னாலே
விளங்கிவரும் ரகுகுலமும வீண் அபக்யாதி யென்னா [லே.

7. உள்ளம் நொந்து உடலுருகி உயிரையுமே தான் நீக்க
மெள்ளவொரு எண்ணம்தானுண்ட மெதுவாக வந்த [னளே

8. மாருதியும் தங்கிருக்கும் மரத்தின்கீழ் வந்தமர்ந்து
ஆறுதலாயுயிர் நீக்க அம்மரத்தின் கிளைபிடித்தாள்.

## 10. ஸீதை தற்கொலை செய்துகொள்ள யத்தனிக்கையில் நற்சகுனங்கள் காணல்.

எ. கோமளமே நீ தயவு.

1. அச்சமயம் மைதிலிக்கு நற்சகுனமாயிற்றே
ஆறுதலாய் நாதன் காணும் குறியும் தோன்றிற்றே.

2. இடது கண்ணுமிடது புஜமுமடர்ந்து துடித்ததே
இடம்பெறவே யிடமுண்டாமென்று மனமுமடித்ததே

3. தங்கமயமான கல் சற்று தளர்ந்தே வீழ்ந்ததே
பங்கமொன்றுமில்லையினியென்றுரைத்ததே

4. இக்குறிகள் கண்டவனும எழில் மதியெனவேதான்
அக்குணத்தை விட்டு நீங்கி ஆலோசித்தானே.

5. விடயமெல்லாமறிந்த அந்த வீரன் மாருதி
திடமுறதேவியையும் தேற்ற எண்ணினன்.

6. புத்திமானும் மாருதியும் பொருந்திடவே காரியம்
அத்திக்கிலே யமர்ந்து ராமசரிதமுரைத்தானே.

---

## 11. ஹநுமார் சிம்சுபா மரத்திலிருந்து ஸ்ரீராமசரித்திரத்தை வர்ணித்தல்.

### நொண்டிச்சிந்து.

இக்ஷ்வாகு குலமதினில்— எழில் தசரதனென்றே
ஒரு மன்னனிருந்தான்—ஒப்பற்றபலவான்.
தப்பில்லாத்தர்மவான்—தானவன்மூத்த பிள்ளை
அறநெறிதவறாத அழகன் ஸ்ரீராமன்—அன்புள்ள
நேயன்—அருந்தவத்தூயன்—அருமறைவாய
னவன்—அருமைப்பிதாவின் மொழி வழுவாது
அருமையாமாசிழந்து—அன்புள்ள மனைவியும்
தெம்பான தம்பியும்—சேர்ந்துதான் வனமேகி
அங்கு ஜனஸ்தானத்திலுள்ள அரக்கரையழிக்க
அறிந்தான் ராவணனும்—பொன்மானையனுப்பியே
பெண்மானைப்பிடித்தே—ஏகினன் வஞ்சனையாய்

அழகிய தேவியைக்காணாது ராமன்—அலைந்தான்
வனந்தனிலே—புத்தியில் மிகுந்த சக்தியே யிழந்த—
சுக்ரீவன் நட்பானான்—அவனுக்காய்
வாலியை வதைத்தவன் ராஜ்யமளித்தே
வாழ்த்தினான் சேனைசேர்த்து—சீதையைதேட
எங்கிலும் நாட—அனுப்பினான் வானரரை .
அவளிங்கிருக்கிறாளென் றுசம்பாதி கூற
நானுமே விரும்பி வந்தேன்—போராழி தாண்டினேனை
நோககவேண்டினேன்—பாக்யத்தின் வசமாக
பார்த்தேனவளையும் தீர்த்தேன் கவலை—ஸ்ரீராமனுரைத
ததெல்லாம்—சரியாயிருந்தது—வழியே புரிந்தது
அருள்வாழி வாழியென்றார்

---

## 11. ஸீதாதேவி ஹநுமானை அம்மரத்தில் காணல் ஹநுமாநும் கீழிறங்கி தன் வரலாறையுரைத்தல்.

. ரா காலையில் கண்ணெழுந்திருந்து

1. ஆனந்தமாம் அம்மொழிகேட்டே
ஆனந்தமானாள் ஜானகியும்
ஆனந்த மொழியையுரைத்ததாரென
ஆனந்தமாயம்மரம் பார்த்தாள்

2. இலைகளினிடையிலோர் சிறு குரங்கு
எழிலுடனிருப்பதை நோக்கியே
நிலையுறநினைவோ அலது கனவோ
அறியேனென்று மயங்கினளே

3. கனவென்றுலெதிர் கண்ணுக்கும்படுமோ
நினைவென்றால் மொழியோர்க்குமோ செவியும்
குணம் கெட்ட அரக்கன் கொடுமாயையோ
மனதிழுக்குமிதின் மகிமையும் ஏதோ

4. எண்ணியே யிவ்விதமேக்கயோகி
பண்ணுவதறியாது பரிதவித்திடவே
அண்ணல் தூதன் அனுமானுமவளை
நண்ணியே வந்து நமஸ்கரித்தான்.

5. வருத்தமே வேண்டாம் தாயேயினி
கர்த்தனும் ராமனின் தூதன் நானே
திருத்தமாயுரைப்பேனென்வாலாறென
பொருத்தமாயுரைத்தே பொருந்திருந்தான்.

---

## 12. ஹநுமார் ஸீதையிடம் ஸ்ரீராமனை வர்ணித்தல்.

ரா. ஆண்டிப்பண்டாரம்.

பல்லவி

வாக்குக்கெட்டாதாம்—ராமன் வடிவழகதுவும்—மன

சரணங்கள்

1. இன்னமும் கலக்கம் வேண்டாம்—எண்ணிடாதே பல் [விதமாய்
சன்னலமாமவனுருவை—நல்முறவேகூறிடுவேன்

2. சூரியகுலத்துதித்த—தாமசூரியனே யானவவன்
ஆரியனும் விளக்கிவெங்கும்—அறநெறியேயுணர்த்திடு [வன்

3. சியாமளநிறத்தனை—ஸ்ரீராமன் கன் இருவாருவம்
பூமகளே கேள்

4. எல்லைபற்றபுகழமைந்த—எழிலான திருவடிக்கே
வல்லையேயுவமையொன்றும்—செந்தாமரையுமீடாமோ

5. மதகரியின் துதிக்கையதும்—மகிமை கருடன் கழுத்
[தும் நாணும்
விதமான தொடைகட்கிடு—விளம்பப்போமோ எங்கி
[னுமே

6. தாமரையாம் பூவுதித்து தக்கஅயன் பிறப்பிடமாய்
மாமறையும்போற்றிசெய்ய மலர்ந்த திருவுந்தியழகும்

7. விரிந்துயர்ந்தமார்பின்மகிமை—பரிந்துகூறலாகிடுமோ
புரிந்தே தவழும் பொருந்திருள் திரு—புகலவென்று
[லாகாதம்மா

8. இருமலைகளொத்த புஜமதினில்—ஈடில்லாத வீரமொ
[ளிரும்
திருக்கைகளின்புகழதனை—ஒருநாவாலுரைக்கலாமோ

9. சங்கம்பழிக்கும் கழுத்தழகும்— துங்கபவழவாயிதழும்
எங்குமின்னுங்கபோலமும்—எற்றதொரு நாசியழகும்

10. கருணைபெருகும தண்ணிரம்பி—பிருகமலமென காந்தி
[வீசும்
திருக்கண்களின் மகிமையதை—தெரியவேநானுரைக்
கப்போமோ

11. அரக்கர் தலைவனைத்திடவே—அமர்ந்த வில்லெனும் புரு
[வம்
ஆறிந்தே கூறலொக்கும்—அவதாரத்தின் மகிமையத
[னை

12. மதிவிளக்கும் நெற்றியழகும்—மாமுடியும் ஜடைமுடி
[யாய்
கதிபெறுமந்தகம்பீரமாம்—நடையழகுமுளக்களிக்கும்

## 13. ஹநுமார் ஸீதையிடம் கணையாழியைக்கொடுத்து சூடாமணியைப் பெற்றுக்கொள்ளல்.

ஈ. இங்கிலிஷ் நோட்.

1. சோகம் நீக்கியே சுகமாக்கும்மாருதி
வேகத்துடனெல்லாமுரைத்துவிளைத்தார் திடனு
மன்னைக்கே—ஸ்ரீராமன்குண—சரிதமும்—உருவமும்
மணமுறவே வோதினான்.

2. அன்பன் யாரென்றே நீயென்னை நம்பவும்
அளித்தான் திருவாழி ராமன் ஆசியுரைகள் கூறியே
தாயேயிதோ—தந்தனன்—இனிஅந்தமாம்—நீவெந்து
யரை நீக்கிடு.

3. கணையாழி கண்டாளே தேவி களிக்கடலுள்மூழ்கினாள்
மார்புறத்தழுவியே மகிமை கண்ணிலொற்றினாள்
வானரேந்தா—வாழிநீ—வாழிநீ—வாழிநீயென்றே
வாழ்த்தினாள்.

4. அன்பு பெருக அநுமானைநோக்கியே
இன்பமானராமதூதா எதளிப்பேனுனக்கு நான்
என் ஆருயிரை—அளித்தவா—மகிழ்வளித்தவா
ஆழியளித்தவாவென்றோதினாள்.

5. அன்னைதன்முகமநுமானும் நோக்கியே
இன்னம் துயரம் வேண்டாம்தாயேஏறவாயென்
தோளிலே—ஓர்கணமே—அன்னையே—உன்னையே
ராமனிடம் சேர்ப்பேனென்றான்.

6. சிறிய உருவாய் புத்திசிறந்த மாருதி
பெரியகடல் தாண்டியென்னை சேர்ப்பேன் கிஷ்கிந்தை
யென்றாய்—குலத்திற்கேற்ற—புத்தியோ—யுக்தியோ
யெந்தசக்தியாலுரைத்தாயென்றாள்.

7. அநுமானுமப்போது அவமானமடைந்துமே
அறியாளெந்தன் ஆற்றலதையதனால் தானுரைக்கின
றான்—நினைத்த உருவம்—தாங்குவேன்—ஏங்காது
பலமோங்குவேனென்று வளர்ந்தானே.

8. வளர்ந்தேஜ்வலித்திடும் வாயுசதனைநோக்கியே நின்
தளர்வில்லாத ஆற்றலெல்லாம் நானறிந்தேனாலும்
என்னைக்கொண்டேக--இடுககளும்—நடுக்கடல்
அப்ப விடுப்பாயென்னை யாரிடம

9. கற்புவழுவாபொற்பாவையுரைத்ததோர்
அற்புதமாம் மொழியதனின் அருமையவனுணர்ந்துமே
அன்றுமெனக்கே—அடையாளம் தடையின்றி
தந்தனித்தனுப்பு என்றான்.

10. காகாசுரன்தன் கதையுமுரைத்தவள்
வாகாம் சூடாமணியதனையும் வளமாங்குறியாய்
தந்தனள்—வேகமாக—எந்தனாம்—வேந்தனையிங்கு
சேர்த்திடவேசெய்வாயென்றான்.

11. அறிவிற்சிறந்தோனந்த குறிகளேற்றுமே அழைத்து
வாரேன் தாயே நான் அரக்கனுயிர் பறித்திட
சோகம்வேண்டாம்—வேகமாய்—படையேகமாய்
பறந்துவந்தே சேர்வோமென்றார்

12. போகும் வழியெல்லாம் உனக்கேபொங்குமங்களம்
பொருந்தவேண்டுமென்றேமனப்பூர்ணமாயாசி கூறினான்
பின்னவனும்—அசுரன் பலத்தையும் வளத்தையும்
அறிய உபாயம்யோசித்தான்.

---

## 14. ஹநுமார் அசோகவனத்தை த்வம்ஸம் செய்தல்

ரா. கோடிபளுஜி

இக்தல்தான்

வனமிகு இவ்வனமழித்தால்தான் வருவாராக்கரும்
என்றெனதிராய் (மிகு)

1. கூட்டமாய் வருவார்கள்—சாட்டுவேனோர் கணம்
காட்டுவேனென்புகழும் (இங்குநிலை)

2. மரங்களை முறித்தான் மகிழ்சோலையையழித்தான்
மலர்களைப்பொடியாக்கினான் (பரு)

3. நாகங்களழிந்தது—கானுமிருகங்
கள்தொலைந்தது—வேகமே தாங்கிடாது (மாருதியின்)

4. பறவைகள் கதறவே—பன்மலர்களும் கருகவே
திறமுடனங்குநின்றான் (வாயுசுதன்)

5. அரக்கிகள் விழித்தார்—அபசகுனத்தில் முழித்தார்
ஆரென்றே நோக்கினார்கள் (திடவீரன்)

6 பர்வதம்போல் தேகமும் பலமுள்ளமுகமும்
பார்த்தே பயந்தார்களே (உளம் நடுங்க)

7. சீதையேயிவனார்—ஆதாவோவுனக்கு
அறிந்திடவுமையென்றார் (எங்கட்)

8. அறியேனேயானென்றும்—தெரியுமேயுங்கள் மாயை
புரியாது போவீரென்றான் (எனக்கென்றும்)

## 15. ராக்ஷஸிகள் ராவணனிடம் ஹநுமாரின் அடாத செய்கைகளைத் தெரிவித்தல்.

ரா. ப்யாக்

சேதி சொல்லவந்தோம்—அரசே ஓர்

1. அழகு வனமழிந்துபோச்சு—அங்கு ஓர் குரங்கு வா [ளாச்சு
அரிய நின்புகழுக்கிதேச்சு—அங்கு செல்லாதெங்கள் [கைவீச்சு

2. நாகங்களழியுதோரா மூச்சே—நாலுமிருகங்களும் ஓடிப் [போச்சே
நல்லகாவலென்பதும் ஏச்சே—நாங்கள் கதிகலங்கிட [லாச்சே

3. மரங்களெல்லாமுறித்தே—பெருமலைகளெல்லாம் பொ [டித்தே
மணிமண்டபமெல்லாமிடித்தே—அணியாம் காங்களும் [கதறவடித்தே

4. சீதையிருக்குமிடமே—அதுச்சயபயமில்லையடமே
அவள்முகமுமோர்திடமே—காணும் குறிவையிவ்விட [மே

5. ஸ்ரீராமனனுப்பிய ஆளோ—அலது சிவனுரேவியவா [ளோ
இந்தலங்கையழியும் நாளோ—அதிஉக்ரமாம் கெட்ட [கோளோ

---

## 16. ஹநுமாநுக்கும் ராக்ஷஸர்களுக்கும் யுத்தம், அக்ஷகுமாரன் வதம், இந்திரஜித்தால் ஹநுமார் கட்டுண்டல்.

ரா. இந்துஸ்தான் தோடி

1. கோபத்தாலரக்கனும்—கவிஞன் கிங்கரரை
என்பதினுயிரும்-ஏகமாகப்போக்கனென்றான் (கோப

2. ஓடிவந்தேயவர்களும்—ஓங்கிப்பாய்ந்தானுமன்மேல்
காடியே—மாருதியும்—ஓடியால் விழ்த்தினன் (உத்
தமவீரன்

3. உப்பரிகைபிடித்தானே பங்குள்ளவரையழித்தானே
அப்புறமும்—வருபவர்கள்—யாரென்று நோக்கினன்
(அதிவீரன்

4. அரக்கவீரன்ஜம்புமாலி—ஆர்ப்பரித்தேவந்தானே
இரக்கமில்லாதவனையும்—இருப்புலக்கையாலழித்தான்
(தீரன்மாருதி

5. மந்திரி புத்ரர்ஏழுபேரும்—மகிமையாக வந்தனர்
தந்திரமாயவரையும—அந்தரமேயேற்றினன் (ஆர்ப்ப
ரித்தானே

6. பஞ்சசேனாபதிகளும்—பாங்குடனே வந்தாரே
அஞ்சலற்ற—மாருதியும்—அரைநொடியிலழித்தான்
(அகமும்களித்தானே

7. அக்ஷகுமாரனை—அதிவீரனங்குவந்தானே
தக்ஷணமே—மாருதியும்— அழித்தேயங்குநின்றானே
(அண்டமதிர

8. இந்தச்செய்தியறிந்தரசன் — இந்திரஜித்தையனுப்பினா
[ன்
அந்தமாக—வந்தவனும்—பிரம்மாஸ்திரமேவினன் (மி
குவீரமாகவே

9. அவனளித்த ஆசியாலென்னையணுகாதிந்த பாணமே
ஆனாலும்—வேலைக்காக—வேடம்போடுவேனெனச்
(சோர்ந்தான்மாருதி

10. களிப்படைந்தஇந்திரஜித்தும் கயிறுசேர்த்திறுக்கியே
அளிப்போமிவனை—அரசனிடமென்றே—அங்குசேர்ந்தா
[ரே (சந்தோஷமாக

17. ராவணன் ஹநுமார்வாலை தீயிட உத்தரவிடுதல்.

ரா. பஹுாரமெரிப்பாரி

ராவணன்.

அரசனும் அனுமானை—அனலெழநோக்கியே
ஆரடா நீ குரங்கே—அ—ஆ—பெருந்த அகந்தையால் வந்
[தாயிங்கே

ஹநுமார்

ஆருமல்லநான்—உன்னையறிந்திடவே வந்தேன்
அறிந்திடு நான் ராமதூதன்—அனுப்பினன் சுக்ரீவ ரா
[ஜன்

ராவணன்.

துஷ்டக்குரங்கே நீ—என்னிஷ்டமாம் வனமழித்தாய்
கஷ்டமே செய்திடுவேன்—நின் உயிர்நஷ்டமேயாக்கி
[டுவேன்

ஹநுமார்.

அவிக்குபயப்படேன்—அதிவீரராமன் தூதன்
தேவியையளித்திடுவாய்—ராமன் திருவடி பணிந்திடு
[வாய்

ராவணன்.

ஆரடா வீரர்கள்—இந்த அற்புத குரங்கதின்
ஆவியை யழிப்பீரென்றான்—அரைக்கணத்திலொழிப்
[பீரென்றான்

விபீஷணன்.

தர்மகுணமுள்ள— தம்பியாம் விபீஷணன்
தாவியேபக்குவந்தான்—தூதனைக் கொல்லாதேயென்
[றான்

அடக்கிடுகோபத்தை—அதற்கொருநீக்கிழைத்து
அனுப்பிடு நகர்கடக்க—அவ்வீரனும் செய்தியறிய

ராவணன்.

அம்மொழியேர்த்தே—அரக்கனும் கூறிடுவான்
அழகுறும்வாலில்தீயை—வைத்தே விரட்டிடென்றான்.

## 18. ஹநுமார் வாலில் தீமூட்டுதல்.

ரா. முத்துக்குமாரயனே.

வாலில் தீயை வைத்தாரே—நாலுவீதியுமிழுத்தாரே

1. கும்பல் கும்பலாய்க் கூடிபகை வம்புரைகள்பேசி
மாருதியின் பலமறியாதுஏசி
பார்ப்பவர்கள் கண்கள்மிக்கூசி—வீசிடும்.

௨. எண்ணினைத்தமாருதியும் எனக்கு சுபமாச்சு
இக்காரியவழியுமிதேயாச்சு
ஈதொருகாரியமாயாச்சு (என்றோச்சும்)

---

## 19. ஸீதை ஹநுமாநுக்கு தீங்கு நேரிடாதபடி அக்னி பகவானை வேண்டல்.

ரா. ஆனந்தபைரவி.

மகிமையாம் அக்னியே மனதிரங்கியந்த
மாருதியை வருத்தாதே

1. வாலில் தீவைத்தானென்று வந்ததோர்சேதியறிந்தேன்
மேலுற ஒளிர்ந்தேயவனுள்ளிற் குளிர்ந்திடுவாய்

2. ஈசன் தன்நெற்றியில்—எழிலுடனிருப்போனே
பேசிடும்கற்புக்கே—பெருமையாய்தங்குவோனே

3. நீதிக்கேசாக்ஷியாய்—நின்றெங்கும் ஒளிர்வோனே
பாதிமதியணிந்தோன்—புன்சிரிப்பிலுமுதித்தோனே

4. வாயுவின்தனயனே வருத்தாதிருப்பீரென
தாபானசீதையும்தானிரங்கிவேண்டினள்.

5. விட்டான்—விடுவிட்டான்—வீடணன் விடுவிட்டான்
பாடுபடுத்தியோர் வீடதுவெல்லாம் தேடிபிடித்துவாடி
[வருந்திட.

---

**21.** லங்கையெரிந்தபொழுது ஸீதைக்கு கெடுதிநேரிட்டதோ
வென்று ஹநுமார் ஸந்தேஹித்து பிறகு சாரணர்க
ளால் ஸௌக்யமென்று தெரிந்துகொள்ளல்.

ரா. எதுகுலகாம்போதி.

பல்லவி

ஆத்திரத்தாலிந்த அனர்த்தமேசெய்தேனே
அன்னையைத்தான் மறந்தே

அநுபல்லவி

கோத்திரத்துக்கேற்றகுணமோ இதுவுமே
சாத்திரமறிந்தும்நான்—சஞ்சலமானேனே

சரணங்கள்

1. அக்னியுமணைத்தவன் அவதியுறும்வேளை
ஆச்சர்ய சகுணங்களடைந்ததக்காலை
அன்னவட்கடங்கியேவிட்டானென்வாலை
அவளையுமெரிக்குமோ ஈதென்னபித்தவேளை

2. என்றெண்ணியிருக்கும்போதிருவர்குரலினால்
அன்னையின்க்ஷேமத்தையறிந்துடமானன்
பின்னையுமன்னையைப்பிரியமாய்ப்பார்த்தேதக
நன்றாகவந்தவளைப்பணிந்தே விடைபெற்றான்

## 22. ஹநுமார் திரும்பி ஸமுத்திரத்தை தாண்டல்.

ரா. இந்துஸ்தான் பார்ஸி

பல்லவி

காற்றுப்போல் மாருதி ககனமார்க்கத்தில்
களிப்பாய் வருகின்றான்—குலுங்கவே—மலைகளுலுங்
[கவே
வானமும்—பூமியும்—ஒன்றாகிட—ஓடிவருகின்றான்

அநுபல்லவி

வானவர் வாழ்த்தியே போற்றியங்கு புகழ்ந்திடவே
[தான்
ஜானகியைக்கண்டுமே—கவலைநீங்க— களிப்பேபொங்க
கர்த்தனைக்காண துரிதமாக ஓடிவருகின்றான்

சரணம்

அ—ஆ — அவன்வீரமே— அறிவாரானேமே
ரவிபோ—வளமதிபோ—நல்கதிபோ—அந்தத்திபேண்
பெனவேகிரியிலிறங்கினான்—நண்பர்கள்கூடநெருங்கி
[னான்
சேதி—ஓதி-சிந்தைகளித்தங்கு அந்தமாகஅமர்ந்தானே
[பவன்

---

## 23. வானரர்கள் மதுவனத்தையழித்தல்.

ரா. முத்திநெறியறியாத

அகமகிழ்ந்தேயெல்லாரும் அடைந்தார்கள் மதுவனமே
அகமகிழ்ந்தேமதுவன்னை ஆவலானார் அத்தினமே
அகமகிழ்ந்தேஅநுமதியும்அளித்தானே அங்கதனும்
அகமகிழும் சுக்ரீவன் அருமைவனத்தன் சென்றாரே

மனமகிழ்ந்தே மதுவுண்டுமே தியமயங்கியே யலையும்போது
வனக்காவல் ததிமுகனும் வந்தனனர் ததமேயென்றிறைந்
[தான்
கனமுறுசுக்ரீவன் மாமனென்னும் கருத்ததுவும்தோற்றுது
அனுறுகோபத்தாலறைந்துமே அவமானமாய்பேசினார்கள்

வீரனும்ததிமுகன் விரைந்தேகியிளம்பினன் சுக்ரீவனிடமே
தீரவே அவனும்யோஜித்தே நிகழ்ந்தது நமக்கும் நற்செய்தி
பாரமதியுள்ளவானார்கள் பாழ்செய்யாதன்பெருமையினால்
சூரனும்அனுமான் திரும்பிவந்தேசுபசெய்தியளித்திருப்பான்.

காரியசித்தியானவர்கள் களிப்புறவேவோர் தடையுமுண்டோ
வேறிதாயினதயென்னுமலே வேண்டியேயவரையழைத்து
[வாவென
நேரிதுவென்றேததிமுகனும் நோய்மதுவனமகாடிநின்றே
கூறியமதியோனங்கதனை கூப்பிட்டேயவன் தெரிவித்தான்.

எல்லோருமாகச் சேர்ந்தே தானெழும்பினாராகாயமார்க்கம
[தாய்
பொல்லாப்பற்றசுக்ரீவன் பொங்கிமகிழவே வந்துகுதித்தார்
நல்லானும் ராமனைநோக்கியே உள்ளமுருகியே மாருதியும்
எல்லாமுன்னருளேயென்றெண்ணி துதித்துப்பணிந்தா
[னே.

---

## 24. ஹநுமார் ஸ்ரீராமரிடம் சூடாமணியை யளித்தல்,

ரா. கல்யாணி

கண்டேன் சீதா தேவியைநான்—கண்டேன் ஸ்ரீராமா
கண்டேன்நானுங்களிகொண்டேன்—கார்திறச்சோம,

1. ஆழிகடந்தே அவதிநீக்கி அடைந்தேன் லங்கையை
வாழியருள்வளமதினுல்—நல்வாழ்வைத்தேடினேன்

2. அற்புதமாம்கற்புடையாள்—அசோகவனத்தினில்
ஆருயிரைவெறுத்தேகிக்கும்—அச்சமயம் கண்டேன்

3. உந்தன்நினைவேயா தமுயர்—உக்ரதபஸ்வினி
வித்தையாகுமவள்மகிமை—எந்தாயென்சொல்வேன்

4. சிறப்பாம்கணையாழியளித்தேதென்செய்திகூறினேன்
இறப்பாமவளாருயிரும்—திரும்பிவந்ததெனலானுன்

5. மாதமொன்றன்மன்னவனை—அழைத்துவாவென்றுள்
ஆதாவாய் நானுமுரைத்தேன்—தாமதம் வேண்டாம்

6. காகாசான் கதையுமுரைத்தாள் களிக்குங்குறியாய்
வாகாம்சூடாமணியுமளித்தாள்— இதோவாங்கிக்கொள்
[வாயே.

---

## 25. ஸ்ரீராமர் ஸந்தோஷித்தல்.

ரா. மோஹனம்

1. அணியாம் சூடாமணியைநோக்கியகமகிழ்ந்தானே
குணமணியாமவள்கொள்கையெண்ணி கொண்டான்
[துயரும்

2 மணியே யளித்தஜனகனையும் மனதில் நினைந்தானே
அணியாமதன் அருமையையும் அறியவுரைத்தான்

3. எங்கட்குயிரையளித்தவனே இனியமாருதி
அங்குசெல்லும் வழியதனை ஆலோசித்துரைநீ

4. மாருதியும் பாதம் பணிந்தே மங்களமாம் ராம
சீருறவே நின்னருளால் ஜயமங்களமேயாமென்றுன்.

---

## 26. மங்களம்.

வாழ்க வாழ்க வாழ்க வாழ்க வாழ்க எங்கும் வாழ்கவே
வையகத்தில் ராமசரிதம வளம்பெருக வாழ்கவே

அரிய ரகுராமனருளால் அறங்கள் மிகவாழ்கவே
ஆதாரம் திருவருளும் பொங்கியெங்கும வாழ்கவே

சோகம் நீக்கும் மாருதியும் சூழ்ந்தேயெங்கும் காக்கவே
வேகமாக பதமளிக்கும் ராமநாமமெங்குமார்க்கவே

அருமறையும் ஆனினமும் அந்தணரும் வாழ்கவே
அப்பாம்பொருளினருளும் அகிலமெங்கும் காக்கவே.

---

